உ

திருபுரசுந்தரி துணை.

# திருவொற்றியூர்

## திரிபுரசுந்தரி

# நவரத்தினமணிமாலை






சென்னை,

ஆதிமூலம் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது

உ

திருபுரசுந்தரி துணை.

திருவொற்றியூர்

திரிபுரசுந்தரி

# நவரத்தினமணிமாலை








சென்னை,
ஸ்ரீ ஆதிமூலம் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது

# முகவுரை.



சென்னைக்கடுத்த திருவொற்றியூரின்கண் வட்டப்பா நாச்சியாருக்கு சுமார் சற்றேறக்குறைய 200 வருஷத்திற்கு முன் முறையே கம்மாள பலி கொடுத்து வந்ததில் ஓர் ஊமை பிள்ளையின் முறை நேரிட அம்பாள் அப்பிள்ளையின்மீது கருணைக்கூர்ந்து மேற்படி பிள்ளையின் நாவில் ஏதோ தெய்வீக தன்மையானதை எழுதிய பின்னர் அவ்வூமை பிள்ளைக்கு உடனே பேசுந்திறமை வந்தது ஷை திருபுர சுந்தரியம்மாளின் மீது பாடினவை

ஆதிவித்வான்களில் ஒருவராகிய ஸ்ரீமான் சூளை. சோமசுந்தர நாயகரின் மாணாக்கர்களின் ஒருவராகிய புல்லரம்பாக்கம் - குப்புசாமி முதலியாருக்கு மேற்சொன்ன நவரத்தின மணிமாலை தெய்வச்செயலால் கிடைத்ததினால் இதை வெளியிட வேண்டுமென இச்சைக்கொண்டு ராயவேலூர் - அருணாசலம் பிள்ளையைக் கேட்டுக்கொண்டதின் பேரில் ஷை அருணாசலம் பிள்ளை அவர்களால் வெளியிடப்பட்டது.

உ

திரிபுரசுந்தரியே நம:

## திருவொற்றியூர்

# திரிபுரசுந்தரியம்மன்

# நவரத்தினமணிமாலை

சீராரு மொற்றித் திரிபுர சுந்தரிதன்
பேரால் நவரத்தினம் பேசுதர்க்கு - காரானை
அத்திதனை ஐங்கரனை மாதேவநின் றருளும்
புத்திரனை என்னுளும் போற்று

1. சுந்தரி, நிரந்தரி, திகம்பரி, பரம்பரி, சுமங்கலி, கிருபாலி, மகுடா சூரசங்காரி, பரிபூரணி, ஜடாதரி, துரந்தரி, ஆனந்தரூபி, சூக்ஷி, அருளாக்ஷி, கமலாக்ஷி, மிருகாக்ஷி, தருஸ்தூலசூக்ஷ்மகாரணி சூலி, தயசாலி, குணசாலி, புண்ணியசாலி, சுபசகித பாக்கிய சாலி, கந்தரி, காந்தி, சமைபத்தி, இமவான் அருள்செய் கௌரி, பாண்டிய குமாரி, கருணா கடாக்ஷி ஓங்காரி, ரீங்காரி, ஸ்ரீங்காரி, ஒய்யாரி, வாரி கதம்பவனதாரி, பரநாரி, அபிராமி, சிவகாமிசூமாதா மாமி,

கல்யாணி, ருத்திராணி மலர்வேணி, சுகபாணி, கமலாசனப் புராணி, வந்தமரர் இந்திரன் முதல் முனிவர் சித்தர்நிதம் வணங்கு மரவிந்த சரணி, மாதரி, தயாபரி பராபரி, கிருபாஹரி, மஹேஸ்வரி, அகோரிவீரி, மறைமுடிவில் நடனமிடும், மணிமந்திர அபிடேகவல்லி, என்று அனுதினமும் உனை மதிக்கும் அடியார்கள் வினை நீக்கி, உன் மலர்ப்பதம் வழுத்தவாமே, அருட் செய்குவாய் அந்தரி, சௌந்தரி, புரந்தரி, புராதனி, அனுதாரக்ஷகி, காரணி, ஆனந்த வைபோக நடனத் தியாகேஸர், அகமகிழ்ந்திடும் அமுதமே அயனிலங்குந் தேவர் துதியிலங்கும் ஒற்றியம் பதியிலங்குங் கௌரி, வன்ன நடையெனு மெல்லி, மின்னு கொடியிடை நல்லி, அன்னை வடிவுடை வல்லியே.

2. சீரிலங்கும் மேக நிறமிலங்கும் கூந்தல், செயமிலங்கும் ரத்தினச் சிகழிகை யிலங்கி வளர், நெற்றியிற் சிந்தூர திலகமுமிலங்கும், புருவசசிலையிலங்கு குமிழ்நாசி யிலங்கு, செவ்வரியிலங்குங் கண்களின் செயலிலங்குந் திவ்ய செவியிலங்கும், வள்ளை செய்யவாயி நகையி லங்குஞ் சமுக நேரிலங்குஞ், சுகந்தாரிலங்குங் கந்தாரக்

தாணிலங்கும், புயத்தின் மேலணிந்தமுத்தார பூஷணமிலங்கும், சரியிலங்கும் முன்கைவரியலங்கும்மோதிரமிலங்கும் கைகளின், தனிக்கரும்பும் புட்பபாணமுமிலங்கு, நற்தனை களிலங்கிவளரும், வாரிலங்குந், தனமிலங்கு, வடபத்திரமணியிலங்கும், விகசித வலம்புரியிலங்கும், சுழியுந்தியுமிலங்கு பந்திரமிலங்கு; மேக வடிவழகிலங்கு தாமரைமிலங்கு உனது மலர்பத மிலங்கவடியார் வாழ்விலங்கும்படி நடப்புரிந்தனுதினம் வழுத்தவரமே அருள்செய்குவாய், ஆரிலங்கும் பூதி அணியிலங்கும் ருத்திராக்ஷமுமிலங்கு புவிதனில் மணியிலங்கு பூஷணத் தியாகேசர் அகமிலங்கும முதமே, அயனிலங்குந்தேவர் துதியிலங்கும் ஒற்றி யம்பதியிலங்குங் கௌரி அன்னநடையெனு மெல்லி மின்னு கொடியிடை நல்லி அன்னை • வடிவுடைவல்லியே.

3. இப்புவியிலன்னையார் கர்ப்பத்திலணுவாய் சயலமகமேருவாகி ஈரைந்து பத்துமாதம் சுமந்தக மெலிந்தின்றபின் சேயாகியும் இளமையிற் பொல்லாத வருமையிர் சிருமை யாயிருந்து முன் செயலில்லாமல் ஈனரையடுத்தடுத்தேயிலவு காத்தகிளிபோல் ஒப்புவமையில்லா மைக்

கண் மடமங்கையர்க்குறவாகியே இசைந்து ஒருமையாங்
காமவெரிதனிலே மனதைவைத் தூடாடியேதிரிந்தும் ஒ
ரிய நின்றடியரோடுறவுசெய்யாமலுன்பதம்வழுத்திடாமல்
ஓகோவிதன்ன விவ்வுலகத்திலென் போலுமொரு பாவியி
ல்லையம்மா முப்பொருளு முக்குணமு முச்சுடருமா
கியே மூவுலகமும் படைத்தாய் முழுதுமே யளித்
தாய்யவை துடைத்தாய் பின்னு மூவர்க்கு முதல்வியானாய்
மோனந்த ஞானந்த வானந்த வாரியே மூவாதாரத்தின்
ஒளியே முகுந்தன்மார் தங்கையே நிதம் துதிக்கும்படி
உனதருள் செய்குவாய் அப்புமதியோடருகு மோங்க
வனிந்த ஆனந்த நடனலோல அருள்புரிதியாகேச
ரிடப்பாக கோதை அபிஷேக நவரத்தினமே அயனி
லங்குந்தேவர் துதியிலங்கும் ஒற்றி யம்பதியிலங்குங்
கௌரி அன்னநடையெனு மெல்லியின்னு கொடியிடை
நல்லி அன்னைவடிவுடைவல்லியே.

4. கனகநற் சபைதனில், சிவகாமியாகியே, கமலா
லயத்தின் வடிவாய், காசியில் விசாலாக்ஷியாகியே, திரு
வாலங்காட்டினில் மஹேஸ்வரியுமாய், கஞ்சிகாமாக்ஷி
யாய் உச்சித மீனாக்ஷியாய்கருவை வாழ்ஒப்பனையுமாய் கற்

பனைகடந்த தாயாரோஹனத்தில் கருந்தடங் கண்ணி யாய், வளருகமடந்தை வளரருணையங்கிரியினில் மருவும் உண்ணுமுலையுமாய், மைலைபம்பதிதனில் கற்பகவல்லி யாய்முல்லைவாயில் வருகொடி யிடையுமாய், மாணிக்க வல்லி சண்பகவல்லியாய் புதுவைமாநகர் ஞானம்பிகையு மாய், மங்கை நாயகியுமாகி, ஜம்புகேசுரமதில் வாழும் அகிலாண்ட உமையாய் ஜனகன் முதலோர் துதிசெய் வேளூரில் மேவிவளர், தையநாயகி அன்னையாய், தர்பறை யுமாய் திரிபுரசௌந்தரியுமாய் ஒருமையாய் தரணிதனில் எள்ளுக்குள் எண்ணைபோல் எங்குமே தானாகி நிறைந்து நின்றாய் சந்ததமும் உந்தனிட மகிமைதனை உலகத்தில் தானறிய ஒருவருண்டோ, அனவரதமும் நினது சரண மது துதிசெய்ய அகமகிழ்ந்து அருள் புரிகுவாய் ஆதியே, சோதியே, நீதியே, தியாகேஸரன்பாய் மகிழ்ந்தமயிலே அயனிலங்குந் தேவர் துதியிலங்கும் ஒற்றியம்பதியிலங் குங் கௌரி, அன்ன நடையெனு மெல்லி மின்னு கொடி யிடை நல்லி, அன்னைவடி வுடைவல்லியே,

5 தந்தை தாய் குரு தெய்வம் நீயலால் அடிய னேன் தனக்குலகில் யாருமுண்டோ, தாமரையினிலையிர்

தளும்பும் நீரதுபோல் தவிக்கையில் இரக்கமிலேயோ தயவிலேயோ உனது மனம் கல்லாயிருந்தாலு முனைவி டுவதுண்டோ, சந்தையிலீழுத்துன்னை நாலு பேர் நகை செய்ய தான் வைத்து நகைசெய்குவேன், மைந்தர்களை ஈணுதமலடியோ முழுதுமே வஞ்சகமிருந்த பரையோ, வர்மமோ இதென்ன என் கர்மமோ தெரியாதுன் மதிப்பு மிப்படியதாமோ, மனமகிழ்ந்தமுதமாம், வசனமொன் றுரை செயின் வாயின் முத்துதிருமோ, சொல்மந்தமோ உன்செவியினந்தமோ கேளாத மகிமையிவ்வளவுதானோ உந்தனுல் தீராத வல்வினைகள் உண்டோ, உனக்கு முயர் தெய்வமுளதோ. உனது நெஞ்சகமிரும்போ, பேசவரி யாதவனமையோ, பேச்சிதானோ, உடுப்பது கரித்தோல், இருப்பது மயானமோ உன் கணவன் உரைசெய்ததோ ஊனமோ, மோனமோ, உன்பெயர் பெண் நீலி, என்று ரைக்கும் வாசகமீதாமோ, அந்தி சந்தியும் நினைந்த கமகிழ்வார்களுக் கருள்தந்து ரக்ஷியம்மா, அன்னமேஅமு தமே சொர்ணமே தியாகேஸர் அகமகிழும்பூங்கிள்ளையே அடனிலங்குந் தேவர் துதியிலங்கும் ஒற்றியம்பதியிலங் குங் கௌரி, அன்ன நடை யெனு மெல்லி, மின்னுகொடி வுடை நல்லி, அன்னவடிவுடைவல்லியே.

6. சந்நிதியை வலமாகவந்து நின் பொன்மலர்த் தாள்மீது சாஷ்ட்டாங்கமாய் நான்விழுந்தக நெகிழ்ந் தானந்தமாகியென் தலைதனிர் கைகூப்பியே சகள மலர் கொண்டார்ச்சனை செய்து பஞ்சாக்ஷரத்தியானஞ்செய்திடில் சாவில்லை நோவில்லை சஞ்சலமுமில்லை யொருதாரித்திரியங்களில்லை பின்னையொரு குறையில்லை வன்னெஞ்சமில்லை யிப்பேருலகமாய் கையில்லை பில்லி சூனிய முதல் பேய்பிடித்தாடுமொரு பேதாதிபேதமில்லை யசடில்லை கசடில்லை அனியாயபேச்சில்லை கூச்சமில்லை பெருமையாகிய பாசமினிது கொண்டெமபடர் பிடித்திடவும் வருவதில்லை இன்னபடி இன்னவகை யின்னசெய வின்னதொழிலியலான விதியுமில்லை இடுக்கங்களில்லை நடுக்கங்களில்லை மிகுயிருளில்லை மருளுமில்லை இழிவில்லை வழுவில்லை சிரையில்லை குறையில்லை யேக்கமொரு நாளுமில்லை ஈனமெருடுறவில்லை வினையில்லை பிணியில்லை யிறங்காத மனமுமில்லை அன்னியர்கள் போலுங் கைநெகிழவிட்டிருப்பது படாதெனக்கன்னையாமே அருமறைத் தலைவயே தியாகருஜர்க்கினிய அகமகிழ்ந்திடுமமூர்தமே அயனிலங்குந்தேவர் துதியிலங்கும் ஒற்றி யம்பதியிலங்

குங் கௌரி அன்னநடைஎனு மெல்லியின்னு கொடி யிடை நல்லி அன்னை வடிவுடைவல்லியே.

7. சஞ்சலமு நெஞ்சினினையாம நின்னுமம்சதா காலமும் நினைந்தால், சனமுண்டு கனமுண்டு மனமுண்டு சுகமுண்டு தனதான்னியங்களுண்டு தனியுண்டு கனியுண்டுமணமுண்டு குணமுண்டு சந்ததிகளுண்டு சுபமாம் சங்கநிதிபதுமநிதி யுண்டு குறைவில்லாத சகல சாம்பிராஜ்யங்களுண்டு வஞ்சகமிலாத நெஞ்சுண்டு விர்ப்பனமுண்டு வாழ்வுண்டு சீருமுண்டு மதியுண்டு கதியுண்டு பதியுண்டு துதியுண்டு மாக்ஷிமையுண்டு நலமாம் வல்லமைகளுண்டு மிகுநல்லறிவுகளுண்டு வளருமா சாக்ஷியுண்டு வாழ்வுண்டு திறமுண்டு பரமுண்டு புறமுண்டுவாக்குண்டு சிலாக்கியமுண்டு நின் செயலுமுண்டுனது கஞ்சமலருதமொரு விருபாதசேர்வையுண்டு நிறையுண்டு பொறையுண்டு மறையுண்டு துறையுண்டு நித்தியானுஷ்டானமுண்டு நேருண்டு தாருண்டு சீருண்டு பாருண்டு நயமுண்டனுதினமு நன்னெறியுண்டு குறியுண்டு திரையுண்டு நேசவிசுவாசமுண்டு அஞ்சலென்றடியவரை யாதரிக்குந் தெய்வவன்னை நீயுண்டு கண்டாய், அழகிநம்பிறைவேணி

நடனத்தியாகேச ரகமகிழ்ந்திடுமமுதமே அயனிலங்கும் தேவர் துதியிலங்கும் ஒற்றி யம்பதி யிலங்குங்கௌரி அன்னநடையெனு மெல்லி மின்னுகொடியிடை நல்லி அன்னைவடிவுடைவல்லியே.

8. ஓதவரியேனுனைப் பாடவரியேனடிமை ஓலை பொன்றெழுதவரியேன் உணரவரியே நெஞ்சில்வஞ்ச மொருவர்க்கியற்ற மரியேன் உள்ளமரியேன் கள்ளமரி யேன் பின்னு முத்தறவுசொல்லவரியேன் ஒருமை யரி யேனுனதுபெருமையறியேனிந்தவுலகவா தனையுமறியேன் சீதமலர் கொண்டுனது பாதமலர்தனை தியானஞ் செய்திடவு மரியேன் சேரவறியேன் நல்ல விசாரமறி யேனுனது செடலில் ... தன் றமறியேன் சித்தமறியேன் ஞான முத்தியறியேன் துரியாதீதம் மென்றேதுமறியேன் சீர்மை யறியேன் நல்ல நேர்மையறியே னினைச்சிந்தித் திரைஞ்சவரியேன் ஏதுமரியேன் சூதுவாது மறியேன் நல்ல யின்பதுன்பங்களறியேன் இறக்கமறியேன் சொல் லணக்கமறியேன் கேள்வியின்முறைகள் பயிலவறியேன் இணக்கமறியேன் மிகுவணக்கமறியேன் மெத்த எளி யன் அடியேனேன் சிறியனுன் இப்பொருளினென்று

மரியாதமுடனே இறக்ஷிப்பதரிதோ சொல்லாய் ஆதறவு நின்னையல்லால் வேறெதெனக்கு கதியுமுண்டோ உனையே யிவ்வுலகினில் அருமறைகள் தேடர் கறிதான தியா கேசரிடமமர்ந்த நவரத்தின மணியே அயனிலங்குந தேவர் துதியிலங்கும் ஒற்றி யம்பதியிலங்கும் கௌரி அன்னநடையெனு மெல்லி மின்னுகொடியிடை நல்லி அன்னை வடிவுடைவல்லியே.

9. சித்ர வடிவான நவரத்ன வடிவே யுசிதசின் மயானந்தவடிவே திகழும்வடிவே தேவர் புகழும்வடிவே புவிசெழிக்கும்வடிவே யளவிலாச்சீலவடிவே வெற்றி நீல வடிவே க்ருபை செய்யும்வடிவே யொரு மையாய்ச் செப்புவடிவே முழுது நம்புமடி[illegible]கள் வினைதீர்க்கும் வடிவே பெருமைசேர்முத்திவடிவே பரிசுத்தவடிவேமும் மூர்த்திகள் வணங்கும்வடிவே மூல வடிவே யருட்பால வடிவே மேலுமுப்புரமெரித்தவடிவே மோனவடிவே சுக மெஞ்ஞானவடிவே முத்திமுதலாயிருந்த வடிவே மோக்ஷ வடிவே மிகுகடாக்ஷ வடிவே மறைமொழியின் கியான வடிவே சுத்த ஒலியாகம புராணவடிவே நித்திய சச்சிதா னந்தவடிவே சரியை கிரிகைகள் யோகஞானவடிவே நிதி

தழைக்கும் வேதாந்தவடிவே தவத்தின்வடிவே யருள் சுரக்கும் வடிவே எங்குந்தானாய் நிறைந்த வடிவே தங்க வடிவே மூலலிங்க வடிவே வேலன் றமிழ்க்கிறங்கு வடிவே அத்தி முகன் முருகனை பெற்றவடிவே மைந்த ரடிமைகளையாளும் வடிவே ஆதிவடிவே பெருஞ் ஜோதி வடிவே தியாகராகமகிழ் ஆனந்தவடிவே அயனிலங்குந் தேவர் துதியிலங்கும் ஒற்றி யம்பதியிலங்கும் கௌரி அன்னநடை யெனு மெல்லி மின்னுகொடியிடை நல்லி அன்னை வடிவுடைவல்லியே.

திரிபுரசுந்தரி

நவரத்தினமணி மாலை முற்றிற்று.

---

